Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு



**லட்சியம்**

மனிதனது வாழ்வின் முக்கிய லட்சியம்— முதல் லட்சியம் தனது தேவைகளைப்பெறுவது தான், பெற்றுத்திருப்தி யாக வாழ்வதுதான்.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


**சொத்து**

சொத்தெல்லாம் சர்க்காருடையது என்று ஆக்கப்பட்டு விட்டால், பிள்ளைக்குட்டி வேண்டும் என்ற ஆசையும் அவற்றைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆசையும் மனிதனுக்கு வராது.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை: 29 - 6 - 83 புதன் வெளியூர்: 30 - 6 - 83 வியாழன் இதழ்: 250

## எஸ். எஸ். எல். சி. தேர்வு: தமிழகத்திலேயே

# மதுரை மாணவி முதலிடம்

### மாணவர்கள் 49 சதவீதம் வெற்றி- மாணவிகள் 58 சதவீதம் வெற்றி

**சென்னை, ஜூன் 29- கடந்த மார்ச் மாதம் நடந்த எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் மதுரையைச் சேர்ந்த லீமா 500-க்கு 477 மார்க்குகள் பெற்று தமிழகத்திலேயே முதலிடம் பெற்றுள்ளார். இந்தத் தேர்வில் மாணவர்களை விட மாணவிகளே அதிக அளவில் வெற்றி பெற்றுள்ளனர்.**

தமிழ்நாட்டில் கடந்த மார்ச் மாதம் எஸ். எஸ். எல். சி. தேர்வு நடந்தது.

இத்தேர்வில் மொத்தம் மூன்று லட்சத்து 46 ஆயிரத்து 883 மாணவ மாணவியர்கள் பங்கேற்றனர்.

இதில் பள்ளிகள் மூலம் தேர்வு எழுதியவர்கள் மட்டும் 2 லட்சத்து 76 ஆயிரத்து 598 பேர் ஆவார்கள்.

தேர்வு எழுதிய மாணவர்களில் 49 சதவிகித மாணவர்கள் தேர்ச்சி பெற்றனர். மாணவிகள் 58சதவிகிதத்தினர் தேர்ச்சி பெற்றுள்ளனர், மொத்தம்500மார்க்குகளில்400-க்குமேல் மார்க் பெற்ற மாணவ—மாணவிகளின் எண்ணிக்கை 7 ஆயிரத்து 784 ஆகும்.

கணக்குப் பாடத்தில் நூற்றுக்கு நூறு வாங்கியவர்கள், 1208 மாணவ மாணவிகள் ஆவார்கள்.

4 ஆயிரத்து 196 மாணவ மாணவியர் விஞ்ஞான பாடத்தில் 95 சத விகிதத்திற்கு மேல் மார்க் வாங்கியுள்ளனர்.

புவியியல், மற்றும் வரலாற்று பாடங்களில் 5 ஆயிரத்து 349 மாணவ—மாணவிகள் 90 சதவிகித மார்க்குகள் பெற்றுள்ளனர்.

### சபாஷ் மதுரை மாணவி

மதுரை கே. புதூரைச் சேர்ந்த லீமாபவுலின் மொத்தம் 500-க்கு 477 மார்க்குகள் பெற்று தமிழகத்திலேயே முதலிடத்தை பெற்றுள்ளார்.

மயிலாடுதுறையைச் சேர்ந்த சீனிவாசன் 473 மார்க்குகள் பெற்று 2-வது இடத்தைப் பிடித்தார். இவர் நேஷனல் மேல்நிலைப்பள்ளி மாணவர் ஆவர்.

472 மார்க்குகள் பெற்று திருச்சி எஸ். பி. எச். மேல் நிலைப் பள்ளியைச் சேர்ந்த என். விஜயலட்சுமி3-வது இடத்தைப் பெற்றார்.

தாம்பரம் நேஷனல் மேல் நிலைப் பள்ளியைச் சேர்ந்த வி. ஸ்ரீதர் 471 மார்க்குகள்வாங்கி 4-வது இடத்தைப் பிடித்தார்.

பட்டுக் கோட்டை அரசு மேல் நிலைப் பள்ளி மாணவர் என். குமரன், தஞ்சாவூர் கல்யாண சுந்தரம், மேல் நிலைப் பள்ளி மாணவர் வி. ஸ்ரீதரன், பொள்ளாச்சி, எம்.பி.எல். மேல் நிலைப் பள்ளிமாணவர்எஸ்.ஸ்ரீதர் ஆகிய 3 மாணவர்களும் தலா 470 மார்க்குகள் பெற்று5-வது இடத்தைப் பெற்றனர்.

மாணவர்களுக்கு மார்க் பட்டியல், ஜூலை 11.ந் தேதி காலை 10 மணி முதல், அவர்கள் படித்த பள்ளிகளில் இருந்து பெற்றுக் கொள்ளலாம்.

### மாணவிகள் அதிகம் தேர்ச்சி

தனியாக தேர்வு எழுதிய மாணவர்களுக்கு தபால் மூலம் மார்க் பட்டியல் அனுப்பப்படும்.

தேர்வு எழுதியவர்களில் மாணவிகள் அதிக அளவுதேர்ச்சிபெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது ஆகும். 49 சதவிகித மாணவர்கள் தேர்ச்சி பெற்றிருக்க, மாணவிகளில் 58 சதவிகிதத்தினர் தேர்ச்சி பெற்று உள்ளனர்.

### அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் கழகத்தில் இணைந்த 60 தி.மு.க. வினர்

நெல்லிக்குப்பம், ஜூன் 29— உள்ளாட்சித் துறைஅமைச்சர் குழந்தைவேலு மைலம், நெல்லிக்குப்பம் ஆகிய இடங்களில் நடைபெற்ற கழக பொதுக்கூட்டகளில் கலந்து கொண்டு பேசினார். அப்போது தி.மு.க விலிருந்து 60 பேர் விலகி கழகத்தில் சேர்ந்தனர்.

தி.க.விலிருந்து 15 பேர் விலகி அமைச்சர் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.



அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்

## பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை

### பேரறிஞர் அண்ணாவின் பவளவிழா!

**75-வது பிறந்ததின விழா**

**தத்துவங்களின் தலைமகனுக்கு முத்தமிழ் விழா!**

★ கவியரங்கம் ★ கருத்தரங்கம்

★ பட்டிமன்றம் ★ இயல்-இசை-நாடகம்

அண்ணனின் வாழ்க்கை வரலாற்றைக் காட்டும்

ரத ஊர்வலம்

கலைஞர்களுக்கு அண்ணா விருது வழங்கும் விழா சென்னையில் நடைபெறும்.

பிற்பட்டவர்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபடும் முதல்வர்களில்

## இந்தியாவிலேயே எடுத்துக்காட்டாக உள்ள தமிழக முதல்வர்

**ஈ. பி, ராயப்பா மனம் திறந்த பாராட்டு**

**சென்னை. ஜூன் 29- பிற்பட்ட மக்களை முன்னேற்றம் பெறவைப்பதில் இந்தியாவிலேயே சிறந்த எடுத்துக்காட்டு முதல்வராக தமிழக முதல்வர் இருக்கிறார் என்று ஈ. பி. ராயப்பா பாராட்டியுள்ளார்.**

பிற்படுத்தப்பட்டவர்களுக்கென தனி இலாகாவை பிற்படுத்தப்பட்டவரிடம் அளித்ததற்கும் அவர் பாராட்டு தெரிவித்துள்ளார்.

அகில இந்திய பிற்படுத்தப்பட்ட மக்கள் இயக்கத் தலைவர் ஈ. பி. ராயப்பா வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறி இருப்பதாவது:- பிற்பட்டோர் இனத்தைச் சேர்ந்த இருவரை அமைச்சர்களாக ஆக்கியதற்கும் அதில் ஒருவரை சிறுபான்மை சமுதாயத்தை சேர்ந்தவரை நியமித்ததற்கும் அகில இந்திய பிற்படுத்தப்பட்ட மக்கள் இயக்கம் தனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

இப்போது தமிழக முதல்வர் பிற்படுத்தப்பட்டோர் இலாகாவை பிற்படுத்தப்பட்டசமுதாயத்தை சேர்ந்தவர்களிடம் அளித்ததற்காக நன்றி உடையவர்களாக இருக்கிறோம்.

### முதல் முதல்வர்

இந்தியாவிலேயே பிற்பட்டவர்களுக்காக ஒதுக்கப்படும் இடங்களை 31 சதவிகிதத்தில் இருந்து 50 சதவிகிதமாக உயர்த்திய முதல் முதல்வர் எம்.ஜி.ஆர்.தான் இந்தியாவிலேயே இது தான் உயர்ந்தபட்ச அளவாகும்.

சமுதாயத்தில் சமூகப் பொருளாதாரத்தில் பிற்பட்ட சமூகமான முத்தரையர் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவரை அமைச்சராக ஆக்கிய முதல் முதல்வரும் தமிழக முதல்வர் தான்.

பிற்படுத்தப்பட்ட மக்களை முன்னேற்றம் பெறவைப்பதில் மற்ற மாநில முதல்வர்களுக்கெல்லாம் சிறந்த எடுத்துக்காட்டாக தமிழக முதல்வர் இருக்கிறார்.

இவ்வாறு ராயப்பா அறிக்கையில் கூறியுள்ளார்.

கழக பொதுச் செயலாளர்

## ப. உ. ச. கடிதம்

நாளை வெளிவரும்

கரூர் நகராட்சிக்கு

### ஜெனரேட்டர் வழங்கு விழா

கரூர், ஜூன் 29— கரூர் நகராட்சிக்கு குடிநீர் சப்ளைக்காக நகர பொது மக்கள் சார்பாக ஜெனரேட்டர் வழங்கும் விழா தமிழ்நாடு குழாய் கிணற்றுக் கழகத்தலைவர் கரூர் சின்னசாமி எம். எல் ஏ. முன்னிலையில் நடந்தது 1லட்சத்து 84ஆயிரம் ரூபாய் செலவில் வாங்கப்பட்ட ஜெனரேட்டரை, மக்கள் சார்பில் அமைச்சர் குழந்தைவேலு நகராட்சி ஆணையரிடம் அளித்தார்.

நகராட்சிமேல் நிலைப் பள்ளி, பசுபதீஸ்வரா உயர் நிலைப்பள்ளி ஆகியவற்றின் கூடுதல்கட்டிடங்களையும் அமைச்சர் குழந்தைவேலு திறந்து வைத்தார்.

16-வது நூற்றாண்டை சேர்ந்த

### தங்கக் காசுகள் மீட்பு

ஐதராபாத், ஜூன் 29- ஆந்திர மாநிலம் அச்சம்பேட்டை தாலுக்காவைச் சேர்ந்த கட்டுதும்மா என்றகிராமத்தில் 16-வது நூற்றாண்டைசேர்ந்ததாக கருதப்படும் 66 தங்க காசுகள். புதைபொருள் ஆராய்ச்சியின் போது மீட்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

கிருஷ்ண தேவராயர், மற்றும் அச்சுதராயர் காலத்தைச் சேர்ந்த தங்கக் காசுகள் இவைகள் என்றும் கருதப்படுகிறது.

3 கிராமவாசிகள் சுவர் எழுப்ப அஸ்திவாரம் தோண்டும் போது முதலில் தங்கக் காசுகள் தென்பட்டதாகவும், அதைத் தொடர்ந்து தொல்பொருள் துறையினர் ஆய்வு மேற்கொண்டதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அமைச்சர் எஸ். டி. எஸ். முன்னிலையில்

## தி. மு. க. - கம்யூனிஸ்டு 200 பேர் கழகத்தில் இணைந்தனர்

**கொள்ளிடம், ஜூன் 29- தஞ்சை மாவட்டத்தில் தி. மு. க. கம்யூனிஸ்டு கட்சிகளிலிருந்து 200 பேர் விலகி அமைச்சர் எஸ். டி. எஸ். முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.**

தஞ்சை மாவட்டம் கொள்ளிடம் நகரத்தில் நடைபெற்றகழக பொதுக் கூட்டத்தில் அமைச்சர் எஸ். டி. எஸ். கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். கூட்டத்திற்கு கொள்ளிடம் முனுசாமி தலைமை வகித்தார்.

கூட்டத்தில் அமைச்சர் எஸ்.டி.எஸ், கலையரசன் எம். எல். ஏ, கோவி. நாராயணசாமி மற்றும் பலர் பேசினர்.

நந்தியூர் கிராமத்தில் இருந்து சதாசிவம் தலைமையில் தி.மு.க. வினர் 57 பேரும் பழையாறு கிராமத்தைச் சேர்ந்த தி.மு.க. வினர் 31 பேர் ஜெகதீசன் தலைமையிலும்அமைச்சர் எஸ்.டி.எஸ். முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

பழையாறு கிராமத்திலிருந்து மூர்த்தி தலைமையில் தி.மு.க. வினர் 17 பேரும் சீயாளம் கிராமத்தில் ஆதிதிராவிட தெருவைச் சேர்ந்த தி. மு. க. வினர் 40 பேர் மூர்த்தி தலைமையிலும் கழகத்தில்இணைந்தனர்.

கொள்ளிடம் நகர தி. மு. க. வினர் 10 பேர் சம்பந்தம் தலைமையிலும் ஆச்சாள்புரம் மார்க்சிஸ்டு கம்யூனிஸ்ட் கட்சியினர் 30 பேரும் தி. மு.க.வினர் 20 பேர் டி. பக்கிரிசாமி தலைமையிலும்கழகத்தில் இணைந்தனர்.

கழகத்தில் இணைந்த 200 பேர்களுக்கும் அமைச்சர் எஸ். டி. எஸ். மாலைகளும் கைத்தறி துண்டுகளும் அணிவித்தார்.

## நல்வாழ்த்து

நமது இதயதெய்வம் தமிழக முதல்வர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களால் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தமிழக அமைச்சர்கள்

திரு. எம். ஆர். கோவேந்தன்,

திரு. எஸ். ஆர். ராதா,

செல்வி. பி. விஜயலட்சுமி

-ஆகிய மூவருக்கும் எனது இதயபூர்வமான நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

-ஜெயலலிதா

சென்னை—14, கொள்கை பரப்புச்செயலாளர்

29-6-83. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

வனவிலங்குகள்

# சரணாலயம்: கலர் சினிமாபடம் எடுக்க தமிழக அரசு முடிவு

## அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

மதுரை, ஜூன் 29- தமிழகத்தில் உள்ள முக்கிய வனவிலங்குகள் சரணாலயத்தை கலர் சினிமாவாக தயாரிக்க கழக அரசு உத்தேசித் திருக்கிறது என்று செய்தி, வனத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. தெரிவித்தார்.

தமிழ்நாடு வனத்துறை அபிவிருத்தி வாரியத்தின் முக்கிய கூட்டம் மதுரையில் நடைபெற்றது. செய்தி அறநிலையம் மற்றும் வனத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. இந்த கூட்டத்துக்கு தலைமை வகித்தார்.



அவர் பேசுகையில் கூறியதாவது:—

தமிழகத்தின் வனத்துறை மேன்மேலும் வளர்ச்சிஅடைந்துவருகிறது. இது பற்றி மேலும் ஆய்வு நடத்தி ஆராய்ச்சி செய்ய பல முக்கிய நிறுவனங்களின் கூட்டுறவுடன் ஒழுங்கிணைப்புக் குழு ஒன்றை ஏற்படுத்துவது மிகவும் அவசியம் ஆகும். அப்படி ஏற்படுத்தப்படும் ஒருங்கிணைப்புக் குழுவில் தமிழக வனத்துறை ஆராய்ச்சிப்பிரிவு, காமராஜ் பல்கலைக்கழகத்தின் உயிரியல் பிரிவு, மாநில வேளாண்மை பல்கலைக் கழகம் ஆகியவை அங்கம் வகிக்கும். இந்த ஒருங்கிணைப்புக்குழு தமிழகத்தில் வனத்துறை மற்றும்

சமூக காடு வளர்ப்பு ஆகியவற்றின் அபிவிருத்திகளை கவனிக்கும். வனத்துறைவளர்ச்சி பற்றியநிதி சம்பந்தப்பட்ட விவகாரங்களையும் மத்திய அரசுக்கு இந்தக்குழுஎடுத்துக்கூறும்.

இந்தக் குழு ஏற்படுவதற்கு முக்கிய விவரங்களைக்கண்டறிந்துஆவன செய்யுமாறு மதுரை பல்கலைக் கழகத் துணை வேந்தர் ஜே. ராமச்சந்திரனைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

### அருங்காட்சியகம்: அரசு அனுமதி

பல்வேறு பகுதிகளில் தமிழகத்தின் வன விலங்குகளின் சரணாலயங்கள் உள்ளன, இவற்றில் ஒரு முக்கிய சரணாலயத்தை கலர் திரைப்படமாக்க அரசுஉத்தேசித்திருக்கிறது சென்னை திரைப்பட கல்லூரியின் உதவியுடன் இந்தக் கலர் திரைப்படம் எடுக்கப்படும்.

''சென்னை அடையாறில் உள்ள சிறுவர் பூங்கா அருகே வனவிலங்குகள் பற்றி அருங்காட்சியகம் ஒன்று ரூ 25 லட்சம் செலவில் அமைக்கப்படவிருக்கிறது. அதற்கான அனுமதியை தமிழக அரசு வழங்கியுள்ளது.

மதுரை மாவட்டம் வருசநாடு பகுதி வைகை ஆற்றின் அருகே சுமார் 100 ஆண்டுகளுக்கும் மேலாக வளர்ந்திருந்த பல அபூர்வ மரங்கள் அழிக்கப்பட்டுள்ளதை-தமிழகத்தின் செல்வம் போன்று பல ஆண்டுகளாக இருந்து வந்த இந்த மரங்கள் வெட்டி வீழ்த்தியிருப்பதுபற்றி விசாரணை செய்ய அரசு உத்தரவிட்டிருக்கிறது.

இந்தப் பகுதியில் சில காண்டராக்ட்காரர்கள் ஏற்கனவே 62 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள மரங்களை வெட்டியிருக்கிறார்கள். வீழ்த்தப்பட்ட சுமார் 15 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள மரங்களைஅங்கிருந்துஅப்புறப்படுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

அரசாங்க மூத்த அதிகாரிகள் இது பற்றி விசாரணை நடத்துவார்கள்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

## வாலிபர் படுகொலை: விசாரணை

சென்னை ஜூன் 28 சென்னை ராயபுரத்தை சேர்ந்தவர் அர்ஜுனன். (வயது 27) இவர் ஒரு ரவுடி என்று கூறப்படுகிறது. இவர் இப்பகுதியில் அடிக்கடி ஏதாவது தகராறு செய்து கொண்டிருப்பாராம். புது வண்ணாரப் பேட்டை ஒத்த வாடைத் தெருவில் அர்ஜுனனுக்கும் மற்ற 4 பேர்களுக்கும் தகராறு ஏற்பட்டதாம். இதை தொடர்ந்து அவர்கள் அர்ஜுனனை கத்தியால் சரமாரியாக குத்தினார்களாம். இந்தக் கத்திக்குத்தில் அர்ஜுனன் குடல் சரிந்து ஸ்தலத்திலேயே மாண்டார்.

வடக்கு துணை கமிஷனர் சுப்பையா சம்பவம் நடந்த இடத்தைபார்வையிட்டார். இந்த கொலை தொடர்பாக போலீசார் 4 பேரையும் தேடி வருகின்றனர்.

## குஜராத் வெள்ளம்: 931 பேர் பலி

அகமதாபாத், ஜூன் 29— குஜராத் மாநிலத்தில் ஏற்பட்ட கடும் புயல் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டோர் எண்ணிக்கை 931 ஆக உயர்ந்துள்ளது. மிக மோசமாக பாதிக்கப்பட்ட ஜுனாகத் மாவட்டத்தில் மட்டும் இறந்தவர்கள் எண்ணிக்கை 400 க்கு மேல் இருக்கும் என்று கூறப்படுகிறது. இது தவிர அம்ரேலியில் 12 பேர்களும் ராஜ்கோட்டில் 5 பேரும் ஜாம் நகரில் 4 பேரும் பவ நகரில் 2 பேரும் ஆக 24 பேர்கள் புயல் வெள்ளத்துக்கு பலியாகியுள்ளனர்.

## கழக செயல்வீரர் கூட்டம்

சீர்காழி, ஜூன். 29- சீர்காழி ஒன்றிய கழக செயல்வீரர்கள் கூட்டம் நாளை(30-ம்தேதி)வியாழன் மாலை 3மணிக்கு சீர்காழி பயணிகள் விடுதியில் க. பாலசுப்ரமண்யன் எம். எல். ஏ. தலைமையிலும் மா. மகாலிங்கம் முன்னிலையிலும் நடைபெறுகிறது, கூட்டத்தில் கழக ஆக்கப்பணிகள் குறித்தும்புதியஉறுப்பினர்கள், சேர்த்தல், பொதுக் கூட்டங்கள் நடத்துதல் ஆகிய பொருள் பற்றியும் விவாதிக்கப்படும். அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு ஒன்றிய செயலாளர்எம். பூராசாமி கேட்டுக்கொண்டுள்ளார்.

## அரியானாவில் 6 மந்திரிகள் ராஜினாமா

புதுடெல்லி, ஜூன் 29- அரியானா மாநிலத்தில் பஜன்லால் தலைமையிலான அமைச்சரவை உள்ளது. இந்த அமைச்சரவையில் இருக்கும் 5 அமைச்சர்களும் 1 பார்லிமெண்டரி செயலாளரும் தங்கள் ராஜினாமா கடிதங்களை பிரதமரிடம் நேற்று கொடுத்தனர்.

அதிருப்தி கோஷ்டியை சேர்ந்த லட்சுமண் சிங், பூல்சந்த் ஆகியோரை பஜன்லால் விலக்கியது தெரிந்ததே, இதைத் தொடர்ந்தே மற்ற 5 அமைச்சர்களும் ராஜினாமா செய்துள்ளதாகக் கூறப்படுகிறது.

மேலும் பல அமைச்சர்கள் ராஜினாமா செய்யக் கூடும் என்று லட்சுமண் சிங் தெரிவித்தார்.

அமைச்சர் ராஜா முகமது தகவல்:

## கரூர் அருகே மினி சிமெண்ட் ஆலை

திருச்சி, ஜூன் 29— கரூர் அருகே மினி சிமெண்ட் ஆலை ஒன்று அமைக்க திட்டமிட்டு இருப்பதாக அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.

விவசாய பொறியியல் சேவா கூட்டுறவு பெடரேஷன் இதைஅமைக்கும் என்றார்.

இந்த ஆலை தினமும் 30 டன் சிமெண்டை உற்பத்தி செய்யும். இதற்கு ரூ. 30 லட்சம் முதல் 35 லட்சம் வரை செலவாகும் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

மக்களுக்குப் பணியாற்ற

# புரட்சித்தலைவர் பல்லாண்டு முதல்வராக இருக்க வேண்டும்

## பெரியவர் செங்கல்வராயன் பேச்சு

சென்னை ஜூன் 2?- மக்களுக்கு நல்ல பல பணிகளைச் செய்ய முதல்வர் புரட்சித் தலைவர் பல்லாண்டுகாலம் முதல்வராக இருக்க வேண்டும் என்று பெரியவர் தியாகி செங்கல்வராயன் கூறினார்.

சென்னை ஏ. வி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் நடந்த சிலம்புச் செல்வரின் 78- வது பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டு பெரியவர் செங்கல்வராயன் பேசுகையில் கூறியதாவது:-

மேலவைத் தலைவர் சிலம்புச்செல்வர் இந்த தேசத்திற்காக உழைத்தவர். அவர் போகாத ஊர் இல்லை. பேசாத மேடை இல்லை. அரசியல் வாதிகளுக்கு எல்லாம் அவர் எடுத்துக் காட்டாக உள்ளார்.

அன்றையதினம் தமிழுக்காக கஷ்டப்பட்டவர்கள் நிலை எனக்குத் தெரியும். அதற்காக அவர்கள் புறக்கணிக்கப்பட்டனர்.

ஆனால் இன்றுள்ள புரட்சித்தலைவர் அன்றைய தினம் கிடைத்து இருந்தால் சரித்திரமே வேறுவிதமாக இருந்திருக்கும்.

இன்றைய தினம் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற குரல் ஒலிக்கிறது. அந்த குரல் கொடுக்கும் காலம் சுபகாலம்.

புரட்சித்தலைவர் இருக்கும்போதுஅதற்காக நாம ஏன் கவலைப்பட வேண்டும்?

ம.பொ.சி.க்கு புரட்சித் தலைவர் கொடுத்துள்ள ஆதரவை எனக்கே கொடுத்த ஆதரவு போல கருதுகிறேன். தேசபக்தி கொண்டவருக்கு இன்று விழா கொண்டாடப்படுகிறது.

புரட்சித்தலைவர் நீண்ட காலம் முதல்வர் பதவியிலிருந்து சேவை செய்ய வேண்டும் என்று கருதுகிறேன்.

### முதல்வரின் புரட்சி

எங்கள் ஆட்சியில் இம்மாதிரி விழா நடந்ததில்லை அப்படி விழா எடுத்தால் எங்கள் கட்சித் தோழர்கள் இவர் ஏன் பிறந்தார் என்று கேட்பார்கள். இன்னுமா இவர் வாழ்கிறார் என்று கூட நினைப்பார்கள்,

இப்படிப்பட்ட விழாக்களைப் பார்க்கும்போது நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன்.

தேசபக்தி கொண்டவருக்கு இன்றுவிழா நடக்கிறது இதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகிக்கிறார் என்றால் இன்னும் கொஞ்சநாள் இருக்க வேண்டும் என்ற நம்பிக்கையோடு நான் வாழ முடியும் என்று நினைக்கிறேன்.

எவ்வளவோ பணிகளுக்கு இடையிலேயும் முதல்வர் இங்கே உட்கார்ந்து இருக்கிறார் ஒரு வேளை இப்படிப்பட்ட விழாக்களில் தான் முதல்வருக்கு ஓய்வு கிடைக்கிறதோ என்று நான் நினைக்கிறேன்.

2 நாட்களுக்கு முன்பு நல்ல செய்தியை அளித்து உள்ளார். மக்களுக்கு நல்லது இருந்தால் மாறுதல் செய்யத்தயார் என்று அந்த சட்டத்தை (பத்திரிகை சட்டம்) நீக்கியுள்ளார்.

முதல்வர் செய்யும் ஒவ்வொன்றும்புரட்சியாக உள்ளது இல்லைஎன்றால் இவ்வளவு நேரம் இங்கே இருந்து இந்த விழாவிற்கு மதிப்பு கொடுப்பாரா?

இவ்வாறு பெரியவர் செங்கல்வராயன் பேசினார்.

## புதுவை பந்த்- உரிய பாதுகாப்பு தரப்படும்: கவர்னர் அறிவிப்பு

பாண்டிச்சேரி, ஜூன் 29- புதுவையில் 30ம் தேதி பந்த் நடக்கும்போது எல்லா தரப்பினருக்கும் உரிய பாதுகாப்பு தரப்படும் என்று புதுவை கவர்னர் சாண்டி கூறினார்.

புதுவை வர்த்தக சங்கம் மற்றும் வர்த்தகர்கள் 30-ந் தேதி பந்தில் பங்கேற்க மாட்டோம் என்று கூறி இருக்கிறார்கள்.

இவர்கள் பாதுகாப்பு கோரி கவர்னருக்கு எழுதி இருக்கிறார்கள்.

பந்த் அன்று எல்லா தரப்பு மக்களுக்கும் உரிய பாதுகாப்பு தரப்படும் என்று கவர்னர் உறுதி அளித்துள்ளார். அமைதிக்கு பங்கம் விளைவிக்கும் முயற்சியில் யாராவது ஈடுபட்டால் கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் கவர்னர் கூறினார்.

# வறட்சி நிவாரணம்: தஞ்சைமாவட்டத்துக்கு ரூ.102 லட்சம் அனுமதி

தஞ்சாவூர், ஜூன் 29. தஞ்சாவூர் மாவட்டத்துக்கு வறட்சி நிவாரணப்பணிகளுக்காக தமிழக அரசு 102 லட்சம் ரூபாய் வழங்கியிருக்கிறது.

தஞ்சாவூர் மாவட்ட ஆட்சித்தலைவர் எஸ், மெய்கண்டதேவன் தஞ்சையில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

நியாயவிலைக் கடைகளில் ஊழல் நடக்காவண்ணம் கண்காணிக்க தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஆயிரத்து 715 நியாய விலைக் கடைகளுக்கும் கண்காணிப்புக் குழுக்கள் நியமனம் செய்யப்பட்டுள்ளன. உணவுப்பொருள்கள் மட்டும் அல்லாமல் காய்கறி சாமன்களையும் இதன் கடைகளில் விற்பனை செய்யும் பணிகள் துவங்கப்பட்டுள்ளன

தஞ்சாவூர் மாவட்டத்தின் வறட்சி நிவாரணப் பணிகளுக்காக அரசு 102 லட்சம் ரூபாய் அனுமதித்திருக்கிறது. கூடுதலாக அரசு அனுமதித்த 48 லட்சம் ரூபாயும் இதில் அடங்கும்.

வல்லம்பஞ்சாயத்தில்குடிநீர் வழங்குவதற்கு8 லட்ச ரூபாயும் தஞ்சை நகரசபைக்கு ரூ. 1 லட்சம், புதுக்கோட்டை நகராட்சிக்கு 2 லட்சம் ரூபாய் செலவு செய்யப்படும் இந்த பகுதிகளில் சிறிய ஏரிகளை பழுது பார்ப்பதற்கும் ரூ, 15 லட்சம் செலவு செய்யபபடும்,

தஞ்சாவூர் மாவட்டத்தில்இருந்து கடத்தி செல்லப்பட்ட ரூ. 57 ஆயிரம் பெறுமானமுள்ள அரிசி மூட்டைகளையும் மாவட்ட அதிகாரிகள் கைப்பற்றி உள்ளனர்,

இவ்வாறு மாவட்ட ஆட்சித்தலைவர் மெய்கண்டதேவன் கூறினார்.



# ஆங்கிலத்தை ஒழித்து இந்தி திணிக்கும் குழுவின் மொழிவெறி

## சென்னை நிருபர்கள் பேட்டியில் ரசாபாசம்

சென்னை, ஜூன்2 -ஆங்கிலத்தை ஒழித்து இந்தியை திணிக்கும் குழு சென்னைக்கு வந்தது. அந்தக் குழு நிருபர்களுக்குப் பேட்டி அளிக்கும்போதும் இந்தி வெறி தாண்டவமாடியது.

மத்திய அரசு அலுவலகங்களில் ஆங்கிலத்தை ஒழித்து இந்தியை திணிப்பது பற்றி ஆய்வு நடத்தும் நாடாளுமன்றக்குழு சென்னை வந்தது.

இந்தக் குழுவினர் சென்னையிலுள்ள மத்திய அரசு அலுவலகங்களை பார்வையிட்ட பின் நிருபர்களுக்கு பேட்டி அளித்தனர்.

கமிட்டியின் துணைத் தலைவர் சிரஞ்சிலால் சர்மா எம். பி. நிருபர்களை வரவேற்று இந்தியில் பேசினார்.

### இந்தியில் பேசாதே

ஒரு நிருபர் குறுக்கிட்டு ''சென்னையில் உள்ள செய்தியாளர்களில் பலருக்கு இந்தி தெரியாது. எனவே ஆங்கிலத்தில் பேசுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

பின்னர் சர்மா ஆங்கிலத்தில் பேசினார். அரசியல் வாதிகள் எந்த மொழியில் பேசினாலும், அரசியல் வாதிகளின் ''பாஷையை'' பத்திரிகையாளர்கள் புரிந்து கொள்வார்கள் என்று நினைத்தேன் என்று சர்மாசொன்னார் டெல்லியில் இருக்கின்ற எல்லா நிருபர்களுக்கும் தமிழில் பேட்டி அளித்தால் புரியுமா என்று ஒரு நிருபர் கேட்டார். அதற்கு சர்மா பதிலளிக்கவில்லை,

தென்மாநில அரசியல் தலைவர்களுக்கு இந்தியில் பேச முடியாமல் இருக்கலாம்.

ஆனால் இந்தியில் பேசினால் புரிந்து கொள்வார்கள் சில இந்தி வார்த்தைகள் அவர்களுக்குத் தெரியும் என்று சர்மா பதிலளித்தார்.

சென்னையிலுள்ள மத்திய அரசு அலுவலகங்களில் மத்திய அரசு எதிர்பார்க்கிற மாதிரி ஆங்கிலத்திற்குப் பதில் அதிக அளவுக்கு இந்தி பயன்படுத்தப்படுவதில்லை என்று சர்மா கூறினார்.

# அணைகளில் வெள்ளம்: நீர்மின் உற்பத்தி அதிகரிப்பு

சென்னை, ஜூன் 29— அணைகளில் வெள்ளம் பெருகி இருப்பதால் மின் உற்பத்தி அதிகரித்துள்ளது.

தமிழகமெங்கிலும் (சென்னை — செங்கை மாவட்டப்பகுதிகள் நீங்கலாக) நல்ல மழை பெய்திருப்பதால் அணைக் கட்டுகளில் நீர்மட்டம் உயர்ந்துள்ளது.

நீர் மின் நிலையங்களில் நேற்று 47 லட்சம் யூனிட் மின்சாரம் உற்பத்தி ஆனது, தொடர்ந்துஇந்த அளவு உற்பத்தி ஆகும்.

தற்போது மின்சார உற்பத்தி நிலைமை ஓரளவு திருப்திகரமாக உள்ளது.

அனல் மின் நிலையங்களைப் பொறுத்தவரை உற்பத்தி சுமாராகவே உள்ளது. தூத்துக்குடியில் 43 லட்சம் யூனிட்டும். எண்ணூரில் 47 லட்சம் யூனிட்டும் உற்பத்தி ஆகிறது. நெய்வேலி அனல் மின் நிலையத்தில் 92 லட்சம் யூனிட் மின்சாரம் உற்பத்தி ஆகிறது.



## பொ. ப. து.

ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள், சென்னை.

ஒப்பந்த விவரம் : மொத்த தொகை

### டெண்டர் அறிவிப்பு

எண் 5 எஸ். பி. ஸி./ எம். எஸ்./83-84

தமிழ்நாடு அரசு ஆளுநருக்காக, அவரது சார்பில் கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் மேற்பார்வை பொறியாளர் அலுவலகம் பொ.ப.து. ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சேப்பாக்கம், சென்னை -600 005 அவர்களால் கீழ்காணும் வகையில் ஒவ்வொன்றுக்கும் எதிராக குறிப்பிட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக் கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3-15 மணிக்கு சென்னை-600 005 சேப்பாக்கம் ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், பொ.ப.து. மேற்பார்வை பொறியாளர் அவர்களால் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை | முடிக்கப் பட வேண் டிய காலம் | டெண்டர் பெற்றுக் கொள்ள கடைசி தேதி |
|---|---|---|---|---|
| 1. | சென்னை-8 எழும்பூர், குழந்தைகள் அருங்காட்சியகத்தின் வெளிப்புற சுவர்களுக்கு மணல் கற்கள் அமைத்துப் பூசுதல் | ரூ. 4,500/- | 2 மாதம் | 19—7—83 |
| 2. | சென்னை - 600005 கஸ்தூரிபாய் காந்தி பெண்கள் & குழந்தைகள் மருத்துவமனையிலுள்ள புதிய அவுட்-பேஷன்ட் பிளாக்கட்டிடத்தின் மீது மேல் மாடி கட்டுதல் | 11.000/- | 7 மாதங்கள் | 21—7—83 |
| 3. | சென்னை-17, மதுரை வீரன் கோயில் தெருவில், 21 சப்- இன்ஸ்பெக்டர்கள் மற்றும் 16 போலீஸ் இன்ஸ்பெக்டர்களுக்கான குடியிருப்புகள் கட்டுதல். | ரூ. 21,300/- | 12 மாதங்கள் | 19-7-83 |
| 4. | காஞ்சீபுரத்திலுள்ள, கலெக்டர் அலுவலக காம்பவுண்டிலுள்ள ஆர். டி. ஓ. அலுவலகத்தின் தனிப்பகுதி கட்டிடத்தின் மீது டி.டி.ஓ. அலுவலகத்திற்கான கட்டிடம் கட்டுதல் | ரூ. 2,800 | 3 மாதங்கள் | 19-7-83 |

| | |
|---|---|
| டெண்டர் கோருவதற்கு தகுதி படைத்த காண்ட்ராக்டர்கள் பதிவு செய்து கொள்ள வேண்டிய வகுப்பு மற்றும் வரம்பு | வரிசைஎண் 1 & 4 க்கு II வது வகுப்பு<br>வரிசைஎண் 2 & 3 க்கு I வது வகுப்பு |
| டெண்டர் குறிப்புகள் கிடைக்கும் தேதி | வரிசைஎண் 1,3,4 க்கு 8-7-83 முதல் 18-7-83 வரை<br>வரிசை எண் 2 க்கு 11-7-83 முதல் 20-7-83 வரை |
| டெண்டர் குறிப்புகள், மற்றும் டேவணித் தொகைக்கான தொகையை செலுத்த வேண்டிய பொதுப்பணித் துறை, நிர்வாகப் பொறியாளர் | வரிசை எண் 1 & 3 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் எண் I சென்னை-600005<br>வரிசை எண் 2 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் எண் III சென்னை-600005<br>வரிசை எண் 4 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் காஞ்சிபுரம் |

டெண்டர் பத்திரங்கள், மத்திய மாநில அரசுகளின், நிறுவனங்கள் மற்றும் இதர இலாக்காக்களில் பதிவு செய்து கொண்டுள்ள காண்ட்ராக்டர்களுக்கு அளிக்கப்படும். தகுதி படைத்த வகுப்பிற்கு ஒரு வகுப்பு குறைவாக பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களுக்கும் டெண்டர் குறிப்புகள் அளிக்கப்படும். அவர்களுக்கு இந்த வேலை அளிக்கப்பட்டால், வேலை ஏற்றுச் செய்வதற்கு முன்னதாகவே தங்கள் பெயரை உயர்ந்த வகுப்பில் பதிவுசெய்து கொள்ள வேண்டும்.

டெண்டர் பத்திரங்கள், வரைபடங்கள் ஆகியவை ஒவ்வொரு வேலைக்கும், விற்பனை வரி&சர்சார்ஜ்உட்பட ரூ. 79.15 ஆகும். மேற்கண்ட தொகை எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது,

வேலைக்கான டெண்டர் பத்திரங்கள் மற்றும் இதர விவரங்கள் ஆகியவை மேற்பார்வை பொறியாளர் அலுவலகம், பொ. ப து. ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள் சென்னை அவர்களிடமிருந்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

டெண்டர் திறக்கப்படும் தேதி, எக்காரணத்தை முன்னிட்டாவது அரசு விடுமுறையாக அறிவிக்கப்பட்டால் டெண்டர்கள் அதற்கு அடுத்த வேலை நாள் பிற்பகல் 3 மணி வரை பெற்றுக்கொள்ளப்பட்டு, அதே தினம் பிற்பகல் 3-15 மணிக்கு திறக்கப்படும்.

மேற்பார்வை பொறியாளர்

சென்னை-5

DIPR-28138-83-16 -SAS

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34. NELSON MANICKAM ROAD MADRAS 600 029

DITOR  E PARASURAMAN

மதுரை எஸ். பாண்டியன் போலீசில் புகார்

# தி. மு. க. கூட்டணி கட்சிகள் நடத்தியது திட்டமிட்ட தாக்குதலே

**மதுரை, ஜூன் 29- தி.மு.க. கூட்டணியினர் முன்கூட்டியே திட்டமிட்டு தனது கடை மீது தாக்குதல் நடத்தியதாக போலீஸ் நிலையத்தில் மதுரை எஸ். பாண்டியன் புகார் கொடுத்துள்ளார்.**

மதுரை விளக்குத்தூண் போலீஸ் நிலையத்தில் மதுரைமாநகர் மாவட்டக் கழகச்செயலாளர் மதுரை எஸ். பாண்டியன் கொடுத்துள்ள புகாரில் தெரிவித்திருப்பதாவது,-

மதுரை யானைக்கல்லில் உள்ள எனது கடை மீது பேரணியில் வந்தவர்கள் சோடா பாட்டில்கள், கற்கள், கம்புகள் கொண்டு தாக்கினார்கள்.

இதுதிட்டமிட்டு நடந்த தாக்குதலாகும்.

இச்சம்பவம் நடப்பதற்கு முன்னதாக 3 நாட்கள் முன்பாக நெடுமாறன் பொன். முத்துராமலிங்கம் தாவூத் (தி.மு.க. வினர்) முனியாண்டி (மார்க்சிஸ்ட்) வேம்புலு (இந்திய கம்யூனிஸ்ட் கட்சி) ஆகியோர் மதுரையில் எல்லா வட்டங்களுக்கும் சென்று எனது கடை மீது தாக்குதலை நடத்த தங்கள் கட்சித் தொண்டர்களைத் தூண்டி விட்டதாகத்தெரிகிறது.

### கடைகள் நாசம்

கழகத்தைச் சேர்ந்த பரமனின் காபிக்கடை தாக்கப்பட்டு அருகில் நிறுத்தப்பட்டிருந்த 2 டாக்சிகளும் நொறுக்கப்பட்டன.

மேலக் கோபுரவாசல் அருகேயுள்ள முன்னாள் எம்.எல்.ஏ. ஏ. லட்சுமி நாராயணன் சகோதரர் பால் கடையும் நாசப்படுத்தப்பட்டது.

இந்தத் தாக்குதல்கள் திட்டமிட்டு நடந்த தாக்குதல்கள் ஆகும், ஆகவே சம்பந்தப்பட்டவர்கள் மீது தகுந்த நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு மதுரை எஸ். பாண்டியன் தனது புகாரில் தெரிவித்துள்ளார்.

### பாண்டியன் அறிக்கை

மதுரைஎஸ். பாண்டியன் விடுத்துள்ள அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

மதுரை நகரில் கண்டன பேரணி என்ற பெயரால் தி மு க கூட்டணியினர் திட்டமிட்டு வன்முறைச் செயலில் ஈடுபட்டனர். எனது கடையும், கழகத் தோழர் பரமன் கடையும் முன்னாள் எம்.எல்.ஏ. லட்சுமிநாராயணன் சகோதரர் கடையும் தாக்கப்பட்டது.

திட்டமிட்டு அராஜகத்தில் திமுகவினர் ஈடுபட்டு ஆங்காங்கே கழகக் கொடி மரங்கள் வீழ்த்தப்பட்டன

நடைபெற்ற வன்முறை சம்பவங்கள் குறித்து உரிய முறையில் புகார் கொடுத்துள்ளேன்.

கட்சிமேலிடத்தில் அனுமதி பெற்று கழக சார்பில் கண்டன ஊர்வலம் நடத்தப்படும்.

இவ்வாறு மதுரை எஸ். பாண்டியன் தெரிவித்துள்ளார்.

புதிய பாலம்:

## அமைச்சர் குழந்தைவேலு அடிக்கல் நாட்டினார்

திருச்சி, ஜூன் 29— உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு திருச்சி மாவட்டம் ஆலத்தூர் ஒன்றியத்தில், ஆலந்தூர் காரைக்கொளக்காநத்தம் சாலையில் மருதையாற்றின் குறுக்கே ரூ, 34 இலட்சம் ஒதுக்கீட்டில் கட்டப்படவிருக்கும் பாலத்துக்கு அடிக்கல் நாட்டினார். வரகூர் சட்டமன்ற உறுப்பினர் நா. பெருமாள் தலைமை தாங்கினார்.

முன்னதாக அமைச்சர் புதிதாக கட்டப்பட்டு வரும் கொள்ளிட பால வேலைகளை பார்வையிட்டார்.

## என். டி. ராமாராவ் முன்பு தற்கொலைக்கு முயன்ற வாலிபர்

ஐதராபாத், ஜூன் 28— ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவ் முன்பாக தற்கொலை செய்து கொள்ள ஓர் இளைஞர் முயன்றார்.

ஆந்திரஅரசு தலைமைச் செயலகத்தில் முதல்வர் என். டி, ராமாராவ் தனது பணிகளை செய்து விட்டு வீட்டிற்கு திரும்ப காரில் ஏறப்போனார்.

அப்போது இரவு 7மணி இருக்கும்.

முதல்வரிடம் மனு கொடுக்க 2 பெண்கள் உட்பட ஐந்தாறு பேர் நின்றிருந்தார்கள்.

அவர்களில் ஒரு இளைஞர் 'திடீர்' என்று தனது பையிலிருந்த கத்தியை எடுத்து தன் வயிற்றில் குத்திக் கொண்டார்.

உடனே அங்கே நின்றிருந்த பாதுகாப்பு ஊழியர்கள் விரைந்து சென்று அந்த நபரைப் பிடித்தனர். அவரிடமிருந்த கத்தியைக் கைப்பற்றினர்.

அந்த வாலிபர் உடனடியாக மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டார். அவரது உயிருக்கு ஆபத்து இல்லை என்று டாக்டர்கள்கூறினார்கள்.

அந்த இளைஞர் பெயர் சத்தியநாராயண ரெட்டி மேற்கு கோதாவரி மாவட்டம் மத்தூரைச் சேர்ந்தவர்.

நிலத்தகராறு காரணமாக அவரது ஊரில் உள்ள சிலர் அவரைத் துன்புறுத்தினார்களாம். இதனால் மனு கொடுக்க முதல்வரை நாடி வந்த போது அவர் தற்கொலைக்கு முயன்றுள்ளார்.

## புதுவை பந்த் அறிவிப்பு: லோகநாதன் கடும் கண்டனம்

### வியாபாரிகளின் பந்த் புறக்கணிப்புக்கு வரவேற்பு

**பாண்டிச்சேரி ஜூன் 29- புதுவையில் நாளை 30ந் தேதி தி.மு.க. உள்ளிட்ட சில கட்சிகள் 'பந்த்' நடத்தப் போவதாக அறிவித்திருப்பது ஜனநாயகவிரோதமானது என புதுவை கழகசெயலாளர் பி கே. லோகநாதன் தெரிவித்துள்ளார்.**



புதுவை மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் விடுத்துள்ள அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

லஞ்ச ஊழல் புகாருக்கு ஆளான புதுவை தி.மு.க. மைனாரிட்டி அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

புதுவை வரலாறு காணாத வகையில் திமுகவினர் லஞ்சம் ஊழல் முறைகேடுகளில் ஈடுபட்டனர்.

புதுவை திமுக மந்திரிகள் ஈடுபட்ட ஊழல்கள் பற்றிய விவரங்களோடு ஏற்கனவே ஜனாதிபதி பிரதமர், மத்திய உள்துறைஅமைச்சர், புதுவை கவர்னர் ஆகியோருக்கு கழகம் சார்பில் மனு கொடுக்கப்பட்டது.

லஞ்ச ஊழல் புகாருக்கு ஆளான தி. மு. க. அரசு மைனாரிட்டி ஆன நிலையில் ஜனாதிபதியால் கலைக்கப்பட்டது.

இந்த நிலையில், தி. மு. க. உள்ளிட்ட சில கட்சிகள் 30-ந்தேதி 'பந்த்' நடத்தப் போவதாக அறிவித்திருப்பது ஜனநாயக விரோதமானது.

### புறக்கணிப்பீர்

இந்த பந்த் அறிவிப்பை, பொது மக்களும், அரசுஅலுவலக்களும், தொழிலாளர்களும், அனைவரும் புறக்கணிக்க வேண்டும் எனறு கேட்டுக்கொள்கிறேன்.

''தி. மு. க. அறிவித்துள்ள 'பந்த்' தில்பங்கேற்க மாட்டோம்'' என வியாபாரிகள் அறிவித்திருப்பது வரவேற்கத் தக்கது ஆகும்.

பந்த்தில் கலந்துகொள்ள வேண்டும் என தி. மு. க. வினர் கடைக்காரர்களையும் மற்றவர்களையும் மிரட்டுவதாக கூறப்படுகிறது.

ஆகவே, தக்கபாதுகாப்பு ஏற்பாடுகளுக்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என கவர்னரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்,

தி. மு. க.வின் 'பந்த்' கோரிக்கையை அனைவரும் புறக்கணிக்க வேண்டும் எனவும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு லோகநாதன் தெரிவித்துள்ளார்.

## மேலவை தேர்தல்: அறிவிப்பு

சென்னை, ஜூன் 29— தமிழகத்தில் இருந்து நாடாளுமன்ற மேலவைக்குத் தேர்ந்து எடுக்கப்பட வேண்டிய 6 உறுப்பினர்களுக்கான தேர்தலையும், தமிழக சட்ட மேலவைக்கு தேர்ந்து எடுக்கப்பட வேண்டிய 7 உறுப்பினர்களுக்கான தேர்தலையும் நடத்துவதற்கானதேதியை இந்திய தேர்தல் ஆணைக்குழு அறிவித்துள்ளது.

அதன்படிஇந்த தேர்தல்களில்போட்டியிடுபவர்கள் ஜூலை மாதம் 4-ம்தேதியில் இருந்து 11-ம் தேதிக்குள் வேட்புமனு தாக்கல் செய்ய வேண்டும்.

12-ம்தேதியன்றுவேட்பு மனுக்கள் பரிசீலிக்கப்பட்டு முடிவு எடுக்கப்படும்

வேட்பு மனுக்களை வாபஸ் பெற கடைசிநாள் ஜூலை 14 ந் தேதி.

தமிழக சட்ட மேலவைக்கு வாக்களிக்கும் நாள் ஜூலை 21.ந் தேதி ஆகும்.

நாடாளுமன்ற மேலவைக்கு வாக்களிக்கும் நாள் ஜூலை 22ம் தேதியாகும்.

போட்டி இருந்தால் வாக்குப்பதிவு 21ம் தேதி காலை 10 மணி முதல் பிற்பகல் 2 மணி வரையில் இருக்கும். அதே போல் 22-ம் தேதியும் இருக்கும்.

தமிழகபோலீசார்சாதனை

## லாரி டயரில் கடத்திய ரூ.1 கோடி அபின் பறிமுதல்

சென்னை, ஜூன் 29— சென்னைக்கும் இந்தூருக்கும் இடையே ஓடிக்கொண்டு இருக்கும் மாநிலங்களுக்கு இடையிலான லாரி ஒன்றின் ஸ்டெப்னி டயரில் ரூ. 1 கோடி மதிப்புள்ள அபின் கடத்தப்பட்டது. தமிழ் நாடு ரகசியபோலீஸ், போதை பொருள் உளவுத் துறையினர்லாரியைமடக்கி அபின் பாக்கெட்டுகளை பறிமுதல் செய்தனர்.

லாரியின் ஓட்டுனர் கைது செய்யப்பட்டார். 14 நாட்களுக்கு இவர் காவலில் வைக்கப்பட்டுள்ளார்.

தென் மாநில முதல்வர்கள் மாநாட்டில் புதுவை தி. மு. க. முதல்வர்

## டி. ராமச்சந்திரன் பங்கேற்றதால் அரசு டிஸ்மிஸ் இல்லை

### கருணாநிதிக்கு ஹெக்டே மறுப்பு

**பெங்களூர், ஜூன் 29- தென் மாநில முதல்வர்கள் மாநாட்டில் புதுவை தி. மு. க. முதல்வர் டி ராமச்சந்திரன் பங்கேற்றதற்காக புதுவை அரசு டிஸ்மிஸ் செய்யப்படவில்லை என்று கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே கூறினார்**

தி. மு. க. தலைவர் கருணாநிதி கூறிவரும் காரணத்திற்கு ஹெக்டே மறுப்பாக இந்தக் கருத்தைத் தெரிவித்துள்ளார்.

புதுவையில் தி. மு. க. ஆட்சிக்கு இந்திரா காங்கிரஸ் ஆதரவு வாபஸ் பெறப்பட்டபிறகு தி. மு, க. மந்திரிசபை டிஸ்மிஸ் செய்யப்பட்டது தெரிந்ததே,

### கருணாநிதியின் நொண்டிசாக்கு

தி.மு.க மந்திரி சபை டிஸ்மிஸ் செய்யப்பட்டதற்கு திமுக தலைவர் கருணா நிதி ஒரு நொண்டி சாக்கு காரணத்தை சொல்லி வந்தார்.

தென்மாநில முதல்வர்கள் மாநாட்டில் புதுவை தி.மு.க. முதல்வர் பங்கேற்றதால்தான் டிஸ்மிஸ் செய்து விட்டார்கள் என்று சொல்லிவருகிறார்

### ஹெக்டே மறுப்பு

கருணாநிதி கூறிய கருத்தை மறுக்கும் வகையில் கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே கூறியதாவது:—

புதுவை திமுகஆட்சிக்கு இந்திரா காங்கிரஸ் கட்சி அளித்து வந்த ஆதரவை வாபஸ் பெற்றதற்கும் புதுவை தி.மு.க முதல்வர் தென் மாநில முதல்வர்கள் மாநாட்டில்பங்கேற்றதற்கும் தொடர்பு இருக்கும் என்று நான் கருதவில்லை.

அதற்கு வேறு பல காரணங்கள் இருக்கலாம்.

இவ்வாறு ராமகிருஷ்ண ஹெக்டே நிருபர்களிடம கூறினார்.

திருவில்லிபுத்தூரில்

## கழக வழக்கறிஞர் வீட்டின் மீது தி. மு. க. தாக்குதல்

**மதுரை, ஜூன் 29- திருவில்லிபுத்தூரில் கழக வழக்கறிஞர் ஒருவரது வீட்டை தி. மு. க காலிகள் தாக்கினார்கள்.**

இதுபற்றிய விவரம் வருமாறு:-

மேற்கு ராமநாதபுரம் மாவட்டம் திருவில்லிபுத்தூரில் வழக்கறிஞராக இருப்பவர் கோபால். கழகத்தைச் சேர்ந்த வழக்கறிஞர் கோபால் ஆக்கப்பூர்வமான கழகப்பணிகளை ஆற்றிவருபவர்.

இவரது இயக்கப்பணிகளைக்கண்டு பொறுக்காத உள்ளூர் தி.மு.க.வினர் வழக்கறிஞர் கோபால் மீது விரோதம் கொண்டிருந்தனர்.

நேற்று முன் தினம் வழக்கறிஞர் கோபால் வீட்டுக்குள் தி. மு. க. காலிகள் புகுந்து தாக்கினார்கள். வீட்டிலிருந்த பொருட்களுக்கு சேதம் விளைவித்தனர்.

திமுக வைச் சேர்ந்த கட்றகரை, சேதுபாண்டி, குருசாமி மற்றும் சிலர் இந்தத் தாக்குதலில்இறங்கிய தாகத் தெரிகிறது,

இந்தத் தாக்குதல் சம்பவம் குறித்து போலீசில் புகார் செய்யப்பட்டு விசாரணை நடந்து வருகிறது.

குஜராத் வெள்ளம்:

## பலகோடி ரூபாய்பாழ்

ஆமதாபாத், ஜூன் 29- குஜராத் வெள்ளத்தின் காரணமாக ரிசர்வ் வங்கியில் பல கோடி ரூபாய் நோட்டுகள் நாசமாகி இருக்கும் என்று அஞ்சப்படுகிறது.

ஜூனாகத் போர்பந்தர் நகரங்களில் உள்ள பாங்குகளின் பத்துப் பதினைந்து பெட்டகங்களில் உள்ள பல கோடி ரூபாய்நோட்டுகள் தண்ணீர் தேங்கியதால் பாதிக்கப்பட்டு இருக்கும் என்று அஞ்சப்படுகிறது.

## தலைமைக் கழக பேச்சாளர் பட்டியலில் இணைப்பு

பி. சுருளியப்பன்.
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்
வருச நாடு
ஆண்டிப் பட்டி தொகுதி
மதுரை மாவட்டம்

**ஜெயலலிதா**
கொள்கை பரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
29-6-83

தலைமைக்கழக அறிக்கை எண்: 101-83

## திருச்சி மாவட்டம் துறையூர் ஒன்றிய கழகத்தோழர்களுக்கு..

கழக விதிமுறைகளுக்கு மாறாகவும். கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் வகையிலும் மீண்டும் தொடர்ந்து செயல்பட்டு வருகிற காரணத்தால்—

துறையூரை அடுத்த
முருகூர் இளமுருகு

இன்றுமுதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் நீக்கி வைக்கப்படுகிறார்.

கழக, சார்பு மன்றத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத் தலைவர் புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு. ப. உ, ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**என். ராசாங்கம்**
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்தியஅண்ணா தி. மு. கழகம்

சென்னை-14
29-6-83

## அமைச்சர் அண்டேயிடம் சத்துணவுக்கு ரூ. 10 ஆயிரம்

சென்னை, ஜுன் 29— சென்னை ஸ்டான்லிமருத்துவ மனையில் நீரிழிவு சிகிச்சைபிரிவைஅமைச்சர் அண்டே தலைமையில் ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. துவக்கி வைத்தார்.

மருத்துவமனை ஊழியர்கள். டாக்டர்கள் சார்பில் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்திற்கு அமைச்சர் அண்டேயிடம் மொத்தம் ரூ 10 ஆயிரத்து 255 வழங்கப்பட்டது.

## முதல் பெண் விமானி

பம்பாய், ஜுன் 29— குஜராத் மாநிலம் சூரத்தைச்சேர்ந்த பெண் டாக்டர் பிரபாவதி தீட்சித் வயது 65. இவர் தனியார் விமானம் ஓட்டுவதற்கான லைசென்ஸ்பெற்றுள்ளார் இந்த வயதில் விமானம் ஓட்டுவதில் ஆர்வம் கொண்டு லைசென்ஸ் பெற்ற முதல் இந்திய பெண்மணி பிரபாவதி தான்.

கோவை மாவட்டம் சிறுமுகை விஸ்கோஸ்

## அண்ணா தொழிலாளர் சங்கத் தோழர்களுக்கு...

சிறுமுகை விஸ்கோஸ் அண்ணா தொழிலாளர் சங்கத்தின் செயலாளராக
**திரு, தசரதன் அவர்களும்**
பொருளாளராக
**திரு. ராஜு அவர்களும்**
நியமிக்கப்படுகிறார்கள்

தொழிலாள தோழர்கள் முழுமையாக ஒத்துழைப்பு நல்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கழகநிறுவனத்தலைவர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச் செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

**வை. பெருமாள்**
பொதுச் செயலாளர்
அண்ணா தொழிற் சங்கப் பேரவை

சென்னை-14
29-6-83





# தமிழ்நாடு பஞ்சாலை நிறுவனம்

★ அமைத்துள்ள ★

## பேரானூர் (புதுக்கோட்டை மாவட்டம்) விசைத்தறிக்கூடத் திறப்பு விழா

## சிறப்பு மலர் ( 30 - 6 - 1983 )



### பேரானூர் விசைத்தறிக் கூட திறப்பு விழா அழைப்பிதழ்

அன்புடையீர்,

நிகழும் ருத்ரோத்காரி ஆண்டு ஆனித் திங்கள் 16-ம் நாள் (30—6—1983) வியாழக்கிழமை மாலை 6 மணியளவில் ஊரக ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்ட நிதி உதவியுடன் **தமிழ்நாடு பஞ்சாலை நிறுவனத்தால்** அமைக்கப்பட்டுள்ள,

**பேரானூர் விசைத்தறிக்கூடத்தை**

புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர்
**உயர்திரு. மு. அ. கௌரிசங்கர்,**
இ. ஆ. ப. அவர்கள் தலைமையில்

கைத்தறி மற்றும் துணி நூல் இயக்குநர்
**உயர்திரு. அ. ந. தியானேசுவரன்,**
இ. ஆ. ப. அவர்கள் முன்னிலையில்

தமிழக தொழில் அமைச்சர்
மாண்புமிகு
**திரு. எஸ். திருநாவுக்கரசு**
பி.ஏ., பி.எல். அவர்கள்

துவக்கி வைக்க அன்புடன் இசைந்துள்ளார்கள்
அனைவரும் பங்கேற்று விழாவினை சிறப்பிக்க அழைக்கிறோம்

இவண்,
மா. இராமன்
நிர்வாக இயக்குநர், தமிழ்நாடு பஞ்சாலை நிறுவனம் மற்றும் விழாக் குழுவினர்.

### தொழில் அமைச்சர் வாழ்த்துச் செய்தி

தமிழகத்தின்தொழில் வளம் பெருகிடவும், தொழிலாளர் மேம்பாடு அடைந்திடவும் **புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர்.** அவர்களின் அரசு நல்ல பல திட்டங்களை தீட்டி முனைப்புடன் செயல்படுத்திவருகிறது. இந்த புனித லட்சியத்தின் ஒரு படி தான் **தமிழ் நாடு பஞ்சாலை நிறுவனத்தால்** ஏற்படுத்தப்பட்டு வரும்**விசைத்தறிக்கூடங்கள்.**

பின் தங்கிய பகுதியான **ஆவுடையார் கோவில் மாவட்டத்தில்** அரசு முதலீட்டில் துவக்கப்படும் முதல் தொழிலகம் **பேரானூர் விசைத்தறிக் கூடம்** என்பது குறிப்பிடத்தக்கது. புதிதாக அமைக்கப்படுகின்ற இது போன்ற விசைத்தறிக் கூடங்களில் நெசவாளர் பெருமக்களுக்கு முன்னுரிமை தரப்பட்டு வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ள குடும்பங்களிலிருந்து தேர்வு செய்யப்படுகிற தொழிலாளர்களேபங்குதாரர்களாகவும் ஆகி மேன்மையுற இருக்கிறார்கள் என்ற சிறப்பம்சம் அனைவருக்கும் பெரும்மகிழ்ச்சி அளிப்பதாகும்.

**பேரானூர் விசைத் தறிக் கூடம்** பல்கிப் பெருகிட எனது நெஞ்சம் நிறைந்த **இனிய வாழ்த்துக்கள்.**

**எஸ். திருநாவுக்கரசு**

## ஊரக மேன்மையை நாடும் விசைத்தறிக்கூடம்

**-அ. ந. தியானேசுவரன், இ. ஆ. ப.,**
கைத்தறி மற்றும் துணி நூல் இயக்குநர்.

**கை**த்தறியிலிருந்து விசைத்தறிவரை-இதுஅறிவியல் முன்னேற்றத்தின் அடையாளம். அனைத்தும் எந்திரமயம்- இது மேனாட்டோரை இந் நூற்றாண்டில் உந்தித் தள்ளும் மந்திரம். நம் தமிழக அரசு கைத்தறியின் நிலையையும் புகழையும் காத்து அதே நேரத்தில் பின்தங்கிய பகுதிகளின் தொழில் வளர்ச்சிக்கும், ஊரக வேலை வாய்ப்புக்கும் உகந்ததோர் உத்தியாக பத்து இடங்களில் விசைத்தறிக் கூடங்களை நிறுவ முடிவெடுத்துள்ளது.

''சின்னச் சின்ன இழை பின்னிப் பின்னி வரும் சித்திரக் கைத்தறிச் சேலையடி—நம்ம தென்னாட்டில்'' என்ற பைந்தமிழ்க் கவிஞன் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலின் உணர்வைக் காத்து, அதே நேரத்தில் கிராமப்புறங்களில் தொழில் மணம் பரவ ஏற்ற வாய்ப்பு என எடுக்கப்பட்ட முடிவே விசைத்தறிக் கூடங்கள்.

விசைத்தறிக் கூடங்களை நிறுவும் பணி தமிழ்நாடு பஞ்சாலைநிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. முதல் கட்டமாக ஜெயங்கொண்டம் (திருச்சி மாவட்டம்), அருப்புக்கோட்டை (முகவை மாவட்டம்)'சிவகிரி (பெரியார்மாவட்டம்) ஆகிய மூன்று இடங்களில் விசைத்தறிக் கூடங்கள் நிறுவப்பட்டு 1982-ம் ஆண்டு முதல் இயங்கிவருகின்றன.

அடுத்த கட்டமாக துவக்கப்பட இருக்கும் பேரானூர் (புதுக்கோட்டை மாவட்டம்) மற்றும் தளவாய்புரம் (முகவை மாவட்டம்), தர்மபுரி, ராசிபுரம் (சேலம் மாவட்டம்) தாராபுரம் (பெரியார் மாவட்டம்), ஜக்கம்பட்டி (மதுரை மாவட்டம்), சங்கரன்கோவில் (நெல்லை மாவட்டம்) ஆகிய இடங்களில் விசைத்தறிக் கூடங்களை அமைக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது.

ஒவ்வொரு விசைத்தறிக் கூடமும் ரூ. 40 லட்சம் முதலீட்டில் நிறுவப்பட்டுள்ளது. ஒவ்வொன்றிலும் வறுமைக் கோட்டுக்குக் கீழுள்ளகுடும்பத்தைச் சார்ந்த 200 பேருக்கு 100 ஆதி திராவிடர்களுக்கும், 100 இதர பிரிவுகளைச் சார்ந்தோருக்கும்-வேலை வாய்ப்பு அளிக்கப்படும். ''வீட்டுக்கு ஒருவருக்கு வேலை'' என்றமாண்புமிகு தமிழக முதல்வரின் வியத்தகு திட்டப்படி, இதுவரை அரசுப் பணியில் ஒருவருக்குக் கூட வாய்ப்பளிக்கப்படாத குடும்பங்களிலிருந்து விசைத்தறிக் கூடங்களுக்குத் தொழிலரனர்கள் தேர்வுசெய்யப்படுகின்றனர்.

விசைத்தறிக் கூடத் தொழிலாளர்கள் — இக்கூடங்கள் கூட்டுறவுச் சங்கங்களாகப்பதிவு செய்யப்படும்போது அவற்றின் உறுப்பினர்களாகவும் ஆவர், தொழிலாளர்களே ஆலையில் பங்குதாரர்களாகவும், தொழிலாளர்களாகவும்இருப்பர். இந்த அடிப்படையில் விசைத்தறிக்கூடங்கள் பொதுவுடமைத் தத்துவத்தின் நாற்றங்கால்களாக அமையும்.

ஆவுடையார் கோவில் வட்டத்தில் அரசால் நிறுவப்படுகிற முதல் தொழிற்சாலை பேரானூர் விசைத்தறிக்கூடம் என்பது குறிப்பிடத்தக்கது- குறிப்பாகச் சிந்திக்கத்தக்கது. இத்தொழிற்சாலையைத் தொடர்ந்து இப்பகுதியின் பொருளாதார மேன்மைக்கு மேலும் பல தொழில்கள் தோன்றிட வாய்ப்புகள் பிரகாசிக்கின்றன.